# அனான்சி ஒரு முட்டாளானான்

ஆங்கிலத்தில்: வெர்னா ஆர்தேமா
படங்கள்: ப்ரைனா வால்ட்மேனின்
தமிழில்: குமரேசன் முருகானந்தம்



# அனான்சி ஒரு முட்டாளானான்

ஒரு ஆஷான்டி கதை

ஆங்கிலத்தில்: வெர்னா ஆர்தேமா
படங்கள்: ப்ரைனா வால்ட்மேனின்
தமிழில்: குமரேசன் முருகானந்தம்



மேற்கு ஆப்பிரிக்காவில், முன்பு ஒரு காலத்தில் அனான்சி என்றொருவன் வாழ்ந்து வந்தான். அவன் பேராசையும் சோம்பேறித்தனமும் உள்ளவன். எப்போதும் ஏதாவது தந்திரம் செய்துவந்தான். ஒரு நாள் காலை அவன் அவனுடைய மனைவி அசோவிடம் மீன்பிடி தொழில் செய்யப்போவதாக கூறினான்.

அதற்கு அசோ, “ஒரு காதில் தான் விழுந்தது, இன்னொரு காதும் இருக்கிறது.” என்றாள் கிண்டலாக.

அனன்சி ஹ... ஹ... ஹ... என்று சிரித்தான். “நான் எனக்குத் துணையாக ஒரு முட்டாளை கண்டுபிடிக்கப் போகிறேன். அவன் எனக்காக எல்லா வேலைகளையும் செய்வான், நான் எல்லா மீன்களையும் எடுத்துக்கொள்வேன்.”

அதற்கு அசோ, “ஹ! அப்படி ஒரு முட்டாளை எங்கே பிடிப்பாய்?”

அவள் தண்ணீர் குடத்தை எடுத்து தனது தலைமேல் வைத்தபடி ஆற்றை நோக்கி புறப்பட்டாள்.



ஆற்றங்கரையில் அசோ, போன்சுவின் மனைவி லாலுயஹவை சந்தித்தாள்.

சௌக்கியமா? லாலுயஹ கேட்டாள்.

“நான்  நல்லாத்தான் இருக்கேன். என்னோட வீட்டுக்காரர் தான் ஏதோ மீன்பிடி தொழில் ஆரம்பிக்கப்போராறாம், அதுல அவருக்கு உதவ ஒரு முட்டாளைத் தேடிக்கிட்டு இருக்காறாம் – எல்லா வேலையும் அந்த முட்டாள் செய்வானாம், இவரு மீன் எல்லாத்தையும் ஏடுத்துக்குவாறாம்.”

லாலுயஹ வீட்டுக்குச் சென்று, அசோ சொன்னதை கணவன் போன்சுவிடம் சொன்னாள்.

போன்சு சிறிது நேரம் யோசித்து, பின்னர் “நான் அனான்சியுடன் மீன்பிடிக்க செல்வேன். அவனை அவனுடைய தந்திரத்தாலேயே தோற்கடிப்பேன்!” என்றான்..

போன்சு, அனான்சியின் வீட்டிற்கு சென்றான்.”நான் உன்னுடன் மீன்பிடிக்க வருகிறேன், ஒருவரைக்காட்டிலும் இருவர் நிறைய மீன்களை பிடிக்கலாம்!” என்றான்.

அனான்சி, போன்சு உதவ முன் வருவதைக்கண்டு ஆச்சர்யபட்டான். சிறிது சங்கட்டமாகவும் உணர்ந்தான். போன்சுவை அவ்வளவு எளிதில் ஏமாற்ற முடியாது. இருந்தாலும், “சரி, முதலில் நாம் மீன்பிடி பொறியை உண்டாக்க வேண்டும்.” என்றான்.



அனான்சியும், போன்சும் பொறி செய்வதற்கான பொருளைத்தேடி புறப்பட்டனர். அவர்கள் ரஃபியா பனை மரங்களைக் கண்டனர். “அனான்சி, அந்த கத்தியை என்னிடத்தில் கொடு. நான் அந்த கிளைகளை வெட்டுவேன். உன்னுடைய பங்கு எனக்கு பதிலாக களைப்படைவதாகும்.” என்றான் போன்சு.

“நிறுத்து,” என்று கத்தினான் அனான்சி. “நான் எதற்கு உனக்காக களைப்படைய வேண்டும்?”

“வேலை நடக்கிறது என்றால், யாராவது ஒருவர் களைப்படையத்தானே வேண்டும்,” என்றான் போன்சு. “நான் கிளைகளை வெட்டுவதானால், குறைந்தபட்சம் நீ செய்ய வேண்டியது சோர்வையாவது எற்றுக்கொள்வதுதான்.”

“களைப்பு மிக மோசமானது! வெட்டுவதை நானே செய்துகொள்கிறேன், நீ எனக்காக சோர்வடைந்துகொள்!” என்றான் அனான்சி.

எனவே, அனான்சி ரஃபியா பனைமரத்தின் மீதேறி மட்டைகளை வெட்டத்துவாங்கினான். போன்சு, பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு ஆ... ஊ... என்று உறுமிக்கொண்டிருந்தான்.

விரைவிலேயே பெருமளவு மரம் வெட்டப்பட்டு குவிந்திருந்தது.



“இப்போது நீ உட்கார்ந்துகொள், அனான்சி. நான் அந்த பொறியை முடைகிறேன். என்ன, எனது விரல்கள் கொஞ்சம் ரணமாகும், முதுகில் கொஞ்சம் வலி வரும், ஆனால் நான் அந்த வேலையைச் செய்வேன், நீ எனக்காக துன்புறுவாயானால்,” என்றான் போன்சு

“நிறுத்து”, நீ நல்லாதான் இருக்கே, நீயே அந்த துன்பத்தை எடுத்துக்கொள். நானே அந்த மீன் பொறியை செய்துவிடுவேன்.” என்றான் அனான்சி.

அனான்சி வேலைசெய்து கொண்டிருக்கும்போது, போன்சு துன்பமுற்றான். அவன் தனது புருவத்தை தேய்த்துக்கொண்டும், முதுகைத் தடவிக்கொண்டும், ஊ...ஊ...ஊ... என்று முனங்கிக்கொண்டிருந்தான்.

போன்சுவின் சமாளிப்பு அப்படி ஒரு திசைதிருப்பலாக இருந்தது, அனான்சி தனது அசௌகரியத்தை மறந்தேவிட்டான். பின்னூவது, கட்டுவது, மறுபடியும் பின்னூவது, கட்டுவது என்று பொறியை அவனே செய்து முடித்துவிட்டான்.

அந்த மீன்பொறியை தலையில் தூக்கி வைத்து சமாக இருக்கச்செய்தவாறு “என்ன ஒரு அருமையான மீன்பொறி!” என்று வியந்தான் போன்சு. “ஆற்றுக்கு போகும் வழியில் யாராவது பார்த்தால், அவர்கள் இது நான் செய்தது என்றே நினைப்பார்கள்,” என்றான்.

“நில், என்று கத்தினான் அனான்சி. என்னுடைய வேலைக்கு நீ எப்படி பெயர் வாங்குவது? என்றபடி அந்த பொறியை போன்சுவின் தலையிலிருந்து இழுத்து தனது தலையில் வைத்துக்கொண்டான்,” அனான்சி.



இருவரும் ஆற்றை அடைந்தபோது, போன்சு சொன்னான்,
“அனான்சி, ஆற்றில் முதலைகள் இருக்கின்றன. நான் இந்த பொறியை பொருத்துகிறேன். என்னுடைய கால் கடிபட்டு துண்டாகிவிட்டால், எனக்காக நீ இறக்க வேண்டும்.”

“நிறுத்து, கத்தினான் அனான்சி. “நீ என்ன என்னை முட்டாள் என்று நினைக்கிறாயா? பொறியை நானே பொருத்துகிறேன். முதலை என்னை பிடித்துக்கொண்டால், எனக்காக நீ இறக்கலாம்!”

அனான்சி, அந்த பொறியை கரையோரம் நாணல் புல் இருக்கும் ஆற்றுநீர் பகுதிக்குக் கொண்டு சென்றான். அவன் அதை ஆற்றின் தரையிலிருக்கும் புல்லின் தண்டோடு கட்டிக்கொண்டு இருக்கும்போது, அவனுடய அலசும் கை ஆற்று நண்டின் மேல் பட்டுவிட்டது. கரக்க்! ஒரு பெரிய கொடுக்கு அவனது சுண்டுவிரலை கிடுக்குபிடி போட்டுவிட்டது. “ஆஆஆஆஆ” என்று அலறிக்கொண்டே நீரிலிருந்து வெளியே வந்தான். தூண்டிலில் தொங்கும் மீனைப்போல அவனது சுண்டுவிரலில் தொங்கிக்கொண்டிருந்தது அந்த நண்டு.





போன்சு, அந்த நண்டின் கொடுக்கை விரித்து அனான்சியின் விரலை விடுவித்தான். “இது தான் இதுவரை நான் பார்த்ததிலேயே மிகப்பெரிய ஆற்று நண்டு. இது உனக்கும் அசோவுக்கும் ஒருவேளை உணவாகும்.

தனது இரத்தம் வழியும் விரலை இலை வைத்து கட்டியபடி, ‘இதை நீயே எடுத்துக்கொள். நான் காலையில் இந்த பொறியினுள் என்ன இருக்கிறதோ அதை எடுத்துக்கொள்கிறேன்,” என்றான் அனான்சி.

லாலுயஹ போன்சு கொண்டுவந்த அந்த ஆற்று நண்டை பார்த்ததும் கைதட்டி மழிச்சியுற்ற கையோடு (நீரை கொதிக்க வைக்க) உலை வைத்தாள்.



அனான்சி வீட்டுக்கு வந்து சேர்ந்த போது, “சரி, அது எப்படி இருந்தது?” என்று கேட்டாள் அசோ.

“எது எப்படி இருந்தது?” என்று கேட்டான் அனான்சி. அவன் அவளுக்கு எதுவும் சொல்ல ஆர்வமில்லாமல் இருந்தான்.

“அதுதான், அந்த மீன்பிடிக்கும் தொழில்,” என்றாள் அசோ.

அந்த பொறி ஆற்று நீரில் பொறுத்தப்பட்டுள்ளது. காலயில் அதில் இருப்பதெல்லாம் நமக்குத்தான்,” என்றான் அனான்சி.

மறுநாள் காலை,விடிந்ததும், அனான்சியும் போன்சும் தங்களது மீன்பிடிப் பொறியைப் பார்க்க சென்றார்கள். அவர்கள் ஆற்றின் கரையை அடைந்தபோது, சுற்றி இருக்கும் நாணல் புற்கள் கலைந்திருந்ததைக் கண்டனர்.

அவர்கள் திடுதிடுவென்று கரையிலிருந்து ஆற்றினுள் ஓடினார்கள். பொறியின் வாய்பக்கத்தை மூடி அதை நீரிலிருந்து வெளியே இழுத்துவந்தார்கள். அதனுள் ஏதோ பெரியதாகவும், கணமாகவும், கருப்பாகவும்,சுற்றிசுற்றியும் இருந்தது! அவர்கள் அதை வேகமாக தரையில் போட்டுவிட்டு பின்னே சென்று நின்று கொண்டார்கள்.

சரசர! பொறியின் மூடி திடீரென்று திறந்தது. வளைந்து வழுக்கிக்கொண்டு வெளியே வந்தது ஒரு மலைப்பாம்பு. அதனுடைய உடம்பு முழுவதும் ஆங்காங்கே உப்பிக்கிடந்தது.

“அங்கே பார் அந்த பாம்பு உன்னுடைய மீன்களை விழுங்கிவிட்டது! எண்ணிப்பார்!” என்றான் போன்சு.

அனான்சி எண்ணினான். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு ... அதே நேரம் அந்த மலைப்பாம்பு தனது முழு உடலையும் இழுத்துக்கொண்டு சலக்புலக் என்று ஆற்றினுள் சென்றுவிட்டது.

“போன்சு, இது என்னுடைய முறை என்று கணக்கிடக்கூடாது. அடுத்து பொறியினுள் வருவதை நான் எடுத்துக்கொள்வேன். மேலும், நாம் இங்கேயே இருந்து கவனிக்கப்போகிறோம்.” என்றான் அனான்சி.



இருவரும் சேர்ந்து அந்த பொறியை மீண்டும் ஆற்றினுள் பொறுத்தினார்கள்.

நேரம் போய்க்கொண்டே இருந்தது. ஒரு வழியாக கடைசியில் மீன்கள் கூட்டம் நீரில் துள்ளிக் குதிப்பதைக் கண்டார்கள். திடீரென்று சரசரவென்று சப்தம். ஆறு முழுவதும் மீன்கள் நீரில் குதித்தபடி நீரோட்டத்திற்கு எதிர் திசையில் சென்றன.

அனான்சியும் குதித்தபடி, “உள்ளே போங்க, பொறிக்குள்ளே போங்க!” என்று கூவினான்.

“அவைகளை ஒரு முதலை விரட்டிக்கொண்டு வருகிறது,” என்று அலறினான் போன்சு.



உஷ்ஷ்! உள்ளிருந்த மீன்களை சிதறியடித்தபடி, மீன்பிடி பொறி நீருக்கு மேலே எழும்பி, ஒரு முதலையின் தலை வெளிப்பட்டது.

அந்த முதலை தன்னை அச்சுறுத்தும் அந்த தொப்பியை அகற்ற இப்படியும் அப்படியுமாக அடித்தபடி  நீருக்கு வெளியே வந்தது.

அனான்சி ஒரு மரத்தின் மீதும், போன்சு வேறு ஒரு மரத்தின் மீதும் ஏறிக்கொண்டார்கள். மரத்தின் மீதிருந்து அவர்கள் தங்களுடைய பொறியை முதலை நிலத்தில் அடித்து நொறுக்குவதைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். படாக்படாக்! ஒரு வழியாக அந்த பொறி விழுந்துவிட்டது. முதலை மறுபடியும் மிகவும் மெதுவாக ஆடி ஆடி மீன்களைப்பிடிக்க ஆற்றினுள் சென்றுவிட்டது.

அனான்சியும், போன்சும் மரத்திலிருந்து இறங்கி அந்த மீன்பிடி பொறியை ஆராய்ந்தனர்.

“நண்பா, வருந்துகிறேன். பொறியின் கதை முடிந்துவிட்டது. இருந்தாலும் பார்ப்பதற்கு ஒன்றும் மோசமாக இல்லை. நான் இதை சந்தைக்கு கொண்டுபோய் விற்றுவிடுகிறேன்.” என்றான் போன்சு.

“நிறுத்து, இந்த மீன் வியாபாரத்திலிருந்து எனக்கு ஒரு மீன் கூட கிடைக்கவில்லை, ஆற்று நண்டு கூட இல்லை. நீ என்னடாவென்றால் அதை என்னிடத்திலிருந்து கொண்டு போக ஆசைப் பாடுகிறாய்! நானே கொண்டுபோய் விற்றுக்கொள்கிறேன்,” என்றான் அனான்சி.



அனான்சி அந்த பொறியை சந்தைக்கு எடுத்துச்சென்றான். அதற்கு பக்கத்திலேயே உட்கார்ந்தபடி. "மீன்பிடி பொறி விற்பனைக்கு, மீன்பிடி பொறி விற்பனைக்கு என்று கூவினான்.

மிக மோசமாக உடைந்து போயிருக்கும் அந்த பொறியைப் பார்த்த மக்கள் கிராம தலைவரிடம் சென்று புகார் அளித்தார்கள்.

அந்த கிராம தலைவர், அனான்சியிடம் வந்து, "நீ என்ன என்னுடைய கிராமத்து மக்கள், ஒன்றுக்கும் உதவாத இந்த மீன்பிடி பொறியை வாங்குமளவுக்கு அவ்வளவு முட்டாள்கள் என்று நினைத்துவிட்டாயோ?
நீ எங்களை அவமதிக்கிறாய்!" என்றார்.

பிறகு, அவர் அந்த மீன்பிடி பொறியை அனான்சி தலையில் வைத்து,”எதுக்கும் உதவாத மீன்பிடி பொறி விற்பனைக்கு, எதுக்கும் உதவாத மீன்பிடி பொறி விற்பனைக்கு என்று கூவியபடி சந்தை முழுவதும் நடக்க வைத்தார்.

அனான்சியின் கண்களில் அவமானத்தால் எவ்வித சுரத்தையும் இல்லாமல் போயிற்று. குழந்தைகள் சப்தமிட்டபடி பின்னாலேயே வந்தனர்!

எல்லாம் முடிந்தபின்னர் போன்சு, அவனிடம் வந்து – “அனான்சி, உன்னுடன் மீன் பிடிக்க, நீ ஒரு முட்டாளைத் தேடிக்கொண்டிருந்தாய். நீ வெகு தூரம் தேடவேண்டியதில்லை. நீ தான் அந்த முட்டாள்.” என்றான்.

“ஆனால், போன்சு நீ எப்படியாப்பட்ட கூட்டாளி? அவர்கள் என்னை கேலி செய்துகொண்டிருந்த போது, நீ அவமானத்தையாவது வாங்கிக் கொண்டிருந்திருக்கலாம்!” என்றான் அனான்சி.



மறுநாள் காலை, அசோவும், லாலுயஹவும் ஆற்றங்கரையில் சந்தித்துக்கொண்டனர். அவர்கள் அங்கு நசுங்கிக்கிடந்த நாணல் புற்களையும் சரிந்துபோன கரையையும் கண்டனர். அது அவர்களின் கணவான்மார்களின் மீன்பிடி தொழிலின் மிச்சம். லாலுயஹ, அசோவிடம், போன்சு எப்படி அனான்சியே எல்லா வேலைகளையும் செய்ய வைத்து ஏமாற்றினான் என்று கூறினாள். அசோ, அப்படி சிரித்தாள் அவள் தலையின் மீதிருந்த குடம் நழுவியது.

விழவிருந்த குடத்தை பிடித்துவிட்டு, “யார் அடுத்தவருக்கு தீங்கு நினைக்கிறார்களோ அவர்களே அதற்கு பலியாவார்கள் என்ற பொன்மோழி எவ்வளவு உண்மையானது பார்த்தாயா!” என்றாள் அசோ.



முற்றும்